ஸ்ரீ

ஸ்ரீராமதூதாயநம:

சீர்காழி - அருணாசலக்கவிராயரவர்களால்

இயற்றிய

# அநுமார்பிள்ளைத்தமிழ்.

இஃது,

கிடைத்த ஒரே பிரதிக்குத் தக்கபடி

புரசை - பிரபந்த வித்வான்

ஸ்ரீமான்

## சொ. பள்ளிகொண்டான்பிள்ளை

அவர்களால் பார்வையிடப்பட்டு,

புரசைபாக்கம் - ரொட்டிக்கிடங்கு

சதுரங்க பட்டணம்

## வேதாசலநாயகரவர்களால்

சென்னை:

ஸ்டார்ஆப் இந்தியா பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பட்டது.

[இதன்விலை அணா - ௨.]

1899.

ஸ்ரீ

ஸ்ரீராமதூதாயநம:.

# அநுமார் பிள்ளைத்தமிழ்.

## காப்பு-வெண்பா.

நித்தன்மே லானதிரி நேத்ரவநு மந்தனெனுங்
கத்தன்மேற் பிள்ளைக் கவிபாட—வித்தை
வரக்கோட்டு மாமுனிபால் வைத்தான் முன்வந்த
கரக்கோட்டு மாமுனிதாள் காப்பு.

## காப்புப்பருவம்.

கார்கொண்டசுரிகுழற்கௌரிதனபாரகனகாசலத்தருவியாடிக்
கருணைபொழிமுக்கட்கரும்பினொருகைக்கனிகவர்ந்துசெங்கதிரனேகஞ்
சூர்கொண்டசேயொளிதுளும்புமணிவேணியஞ்சுடர்மதியையங்குசுமெனத்
தூவுந்துளைக்கைகொடுவாவுங்களிற்றினிருதுணையடிகளைத்துதிப்பாம்
பார்கொண்டபிரமனுஞ்சுரமனும்பரமனும்பங்கயச்செங்கணனும்
பகிரண்டகோடியும்பல்லுயிர்த்தொகையும்பரந்தெள்ளினெண்ணையைப்போ[ற்]
சீர்கொண்டமைந்துவளர்தேவனையெவர்க்குமுயர்தெய்வங்கண்மணவாளனைத்
திரிநேத்ரவீரவநுமந்தனைப்பாடுமென்செந்தமிழ்க்கவிதழையவே. (க)

சீர்பூத்ததெய்வப்பொலன்கிரிமுகட்டிலடர்திணியிருட்படலமோடச்
செங்கதிர்பரப்பியெழுபலகோடிசூரியர்திரண்டதிருமுகவீரனைத்
தார்பூத்தபுவனமொடுபுவனத்திலுள்ளுறைசராசரமனைத்தினுக்குந்
தாய்க்குநிகரானதிரிநேத்ரவநுமந்தனைச்சந்ததமுகந்துகாக்க
சூர்பூத்தநேமிப்பெரும்படைதுலங்கச்சுராதிபர்கரங்குவிப்பத்
தும்புருவுநாரதருமன்பின்வீணைப்பாண்டொடங்கிநல்லிசைகள்பாடப்
பார்பூத்தமுழுமணிப்பஃறலைப்பாந்தட்படுக்கைற்பரிமளச்செம்
பங்கயச்செல்வியிணையடிவருடவிழிவளர்பசும்பொற்கருங்கொண்டலே. (உ)

கானூறுகற்பகத்தருநிழலிருக்கின்றகடவுளர்மடந்தையரொலாங்
கட்டுபொற்றாலிநிலைவிட்டுவிட்டோடாதுகாத்தருளவாய்த்தமணியைத்
தானூறுமதிகொண்டுகலையெலாநிலைகண்டசதுரவிஞ்ஞானநிதியைத்
தக்கவர்பணிந்தேத்துமுக்கணுடையநுமந்தசாமியைத்தனிபுரக்க
வானூறுநான்முகத்தொருவன்முதலாய்மறைவழங்கநின்றோர்யாவரும்[த்]
வரிவிழிக்கடையினருள்வாரிபெறமுடிசாய்த்துவாய்கொண்டுவாழ்த்தெடுப்ப
தேனூறுமெல்லிதழடுக்கணைதொறுந்தும்பிசெவ்வழிப்பாடல்பாடச்
செந்தாமரைப்பொகுட்டினிலரசிருக்கின்றதெய்வச்செழுங்கமலையே. (௩)

### வேறு.

திருகுகொற்றமலிபெருமதக்கரியினுரிவிரித்திருபு
யங்களிற்போர்த்தவள்
திடமடுத்தமுதலையையடித்துமதகரிபிடித்ததுய
ரந்தனைத்தீர்த்தவள்
சிவனளித்ததொருதவமிகுத்தகடகரிதனக்கிளமை
கொண்டெடுத்தார்த்தவள்
தெறுசினத்தவளமதகரிப்பவனிதனைநடத்தியுல
கந்தனைக்காத்தவள்
இருநிலத்தையடியொடுதுளக்கிநவமணியெயிற்றினிடை
வந்திடப்பேர்த்தவள்
இடியொலிக்குநிகரொலிபடைத்துமகிடனைமுருக்கியம
டங்கலுக்கேற்றவள்
எழுதுதற்கரியசதுமறைப்பொருளையிவையெனத்தொகைவி
ளங்கிடச்சேர்த்தவள்
இமையவர்க்குமுயர்நிலைமைபெற்றவிவரொழுவர்பத்மசர
ணங்களைப்போற்றுதும்
ஒருபொருப்பைவரிசிலையெனக்கொளுவியெதிருமுப்புரரை
யும்படத்தீர்த்தவன்
உலகனைத்துமணியுதரமத்தியினிலொளிவிரித்தமல
ருந்தியிற்பூத்தவன்
ஒளிநறைக்கமலமலரணைத்தவிசிலுலகமுற்றுமுத
வுந்தனிப்பார்த்திவன்
உலவுமிப்பெரியதலைவர்நித்யவரமுதவும்விக்ரமது
ரந்தனைப்பாக்யனை
வருகதிர்க்கிரணதருணரத்நமணிமகரமிட்டசிறு
குண்டலத்தூக்கனை
மகரவட்டமெழுசிகரவட்டமொடுவளையவட்டமிடு
மிண்டனைக்காற்றுடன்
மனமகிழ்ச்சிதருபுனிதலக்ஷணிகவனிதையர்க்குளுய
ரஞ்சனைத்தாய்க்கொரு
மகனையுத்தமவைம்முகனையக்நிகரன்மகனைமுக்கணநு
மந்தனைக்காக்கவே.

ஒலிதிரைப்பேரோடைநடுவண்முழைவாய்திறந்தொருகாலைவவ்வியீர்ப்ப
உடனின்றபிடியலறமேலாதிமூலத்தினொருவனேயென்றுகதறிச்
சலிமதம்பொழிநீரும்விழிநீருமோடத்தளர்ந்தகரிதன்னையடுபோர்
தருமுதலைவென்றுதனதொருமுதலையடிதொழுதசக்கரக்கடவுள்காக்க
புலியடுதடக்கைமாவலிதனையிரந்துபின்போந்துபகிரண்டமெல்லாம் [னைக்
பொதிர்ப்படையவண்ணுந்தெழுந்தமணிவண்ணனைப் போலுமுயர்மேனியா
கலியளிதுதைந்தபைந்துளவணிதடம்புயக்காவலனைமூவுலகமுங்
கைகுவித்திடுமுக்கணநுமந்தனைப்பரவுமென்கடவுட்பெருங்கவியையே. (ரு)

சத்தலோகபுவனங்களைக்காட்டியதக்கநான்முகனுளம்பெறச்சூட்டிய
நித்திலாரமதுபண்புறப்பூட்டியநித்யபாரதிபதங்களைப்போற்றுதும்
வெற்றிவீரவநுமந்தனைச்சீர்பெறுவிக்கும்வீரவநுமந்தனைக்கீர்த்திகொள்
முத்திவீரவநுமந்தனைப்பேர்பெறுமுக்கண்வீரவநுமந்தனைக்காக்கவே. (சு)

தவமிக்ககொடுவாளரக்கர்வ்டுபடையெலாஞ்சாடிமுனைவாகைசூடிச்
சரமாரன்விடுபடைக்குரமீடழிந்துசிலதையலார்செய்யகனகக்
குவடிட்டமெனவேறுகடவுளரொலாந்தலைகுனிப்பவில்வேளைவென்ற
கொற்றவனைமுக்கணநுமந்தனைப்பாடுமென்கொழிதமிழ்க்கவிதைகாக்க
கவரிப்பெருங்குலக்கற்றையெனநீடிளைகறங்குபாலாழிநடுவட்
கண்வளருமாதியிசைபண்வளருமேதகுகவித்தொடையலங்கலெனவே
விவரித்துளைக்கடங்காமலடிமுடிநடுவிளங்காமலளவுகாணு
வேதங்களைத்தமிழ்தொகுத்தநம்மாழ்வார்விளங்குபொற்சரணங்களே. (எ)

வச்சிரக்கடவுளக்கினிக்கடவுள்தெற்கினிற்கடவுளங்கயற்காப்பவன் [ல்
மைப்புனற்கடவுளப்புறக்கடவுள்வைப்புடைக்கடவுள்செஞ்சடைக்காட்டினி
அச்சமற்றுலவுநச்செயிற்றரவுபிச்சிமொய்த்ததொருகங்கையைச்சாத்திய
அத்தர்பத்தர்பணிபெற்றமுத்தர்முதலட்டதிக்கரசர்தங்களைப்போற்றுதும்
மெய்ச்சகத்ரபணகர்த்தனுக்குமுலவைப்பதிக்குமொருசண்டைமுன்னாட்பட
விக்ரமித்துவடவெற்பைமுட்டியதைவெட்டிவிட்டெறியவெண்டிரைக்கார்க்கடல்
வச்சிருக்கவொருதச்சனிச்சையில்வகுத்தமைத்ததொரிலங்கையிற்போயெரி
வைத்தவப்பனையெடுத்தவெற்பனைவளத்தமுக்கணநுமந்தனைக்காக்கவே. (அ)

காசமிடிதலைவலிகளீருள்குலைவலிபொருமல்காதுவலிநயனவலி
வெப்புக்கள்மாறவும்
காடுபடுகரடிபுலியாளியடலரிநரிகள்காயும்விடமொழுகுபணி
பக்கிட்டுமீளவும்
காளிமுயலகனிருடிகூளிகுறளிகளலகைகாணுமுனமழுதுகத
றிக்கத்தியோடவும்
காரிகதிர்மதிபுதன்வியாழமுதலிவர்கள்சுபகாலபலனுதவிமிக
ரக்ஷித்துவாழவும்
வீசுரதகசதுரகசேனைபொருகளரிமிசைவேணமருவலர்முடியை
வெட்டிக்கையாறவும்
வேலைமிசைமலையின்மிசைஞாலமிசைககனமிசைமேருமுதலுலவிவரு
சித்துக்கள்கூடவும்

வேதகலைமிருதிகலைஞானகலைமநுகலைவியாகரணகலைகண்முதல்
கற்றுச்சொல்பாடவும்
மேலமரர்குலமுமுனிவோர்குலமுநியதியொடுவேள்விஜபதபமுறை
வளர்த்துக்குலாவவும்
நீசநிருதர்கடமதுவாசமனைவியர்வயிறுநீறுபடவவரவர்ப
தைத்தொக்கவாடவும்
நேடியுறைபலபுவனகோடிகளுமுனதடியினீழலிடைவளர்துமென
மெயப்பத்திகூரவும்
நேமிமலைபரிதிமலைமேருமலையிமயமலைநீலமலைமுதன்மலைக
ணெட்டிட்டுவீறவும்
நீயதிகனெனவினவிவாயுமகபதிபுகழைநேருமறுதிசையரச
ரொத்துக்கைபேசவும்
ஆசகலுமரமகளிர்சாமரைகள்வீசமுனையாழிவளைதிகழமகு
டப்பத்திவீசிட
ஆடவர்கள்பரவவிளையாடல்புரிபவனையெனையாளுமொருதனிமுதலை
வெற்றிப்பிரதாபனை
ஆசைகளையுதறிவிடுதேசிகனையழகுதிரிலோசனனையநுமனைவ
னப்புக்கோர்காவலர்
ஆறிருவர்பதினொருவர்நாலிருவரிருவரொனவாகவகையுளவமரர்
முப்பத்துமூவரோ. (௯)

மருவார்நரம்புளர்ந்திசைமுரலவிரல்சென்றுவரிசையினடாத்தவொலிசூழ்
மணிநரம்பொடுதழுவுசுதிகிளர்ந்தமுதொழுகுமகதியாழுண்டசெவிகள்
வெருவார்கருந்துளையநெரிதோல்பறந்தலையின்வேடர்வழிசூறையிடுதீ
வெடிகுரற்பறைசீறுமிடிகுரன்முழக்கினைமிசைந்ததுகடுக்குமந்தோ
ஒருபாணர்பூதர்பொய்கையர்பேயர்பரகாலருறுதொண்டர்காற்பொடியர்சீர்
உற்றகுலசேகரர்மழிசையார்வில்லிபுத்தூரர்நம்மாழ்வார்முதற்
திருமேவுமாழ்வார்கள்பதின்மரும்வடித்துத்தெருட்டியுரையிட்டமதுரச்
செந்தமிழ்த்தேனுண்டசிறியதிருவடிகளிருசெஞ்செவிக்கென்கயவிரோ. ௧௦

காப்புப்பருவம் முற்றிற்று.

# செங்கீரைப்பருவம்.

மைவார்நறுங்கூந்தலஞ்சனையமைத்ததிருமஞ்சனக்களபமாடி
வார்நறுஞ்சுண்ணந்திமிர்ந்துதிருநெற்றிமிசைமணிதிலக்காப்புமிட்டுக்
கைவார்நறுங்குஞ்சிசூட்டியணிநூபுரக்காலணிகலன்கள்பூட்டிக்
கைவிரல்சுவைத்தன்னைமெய்விரற்சிந்தூரகாந்திகொளிரேகைதீட்டிப்
பெய்வார்நறுந்தேறலொழுகவொழுகக்கால்பெயர்த்துமுலையுண்டுவிம்மிப்
பெருவிழிக்கடைசிவந்தங்காந்துகுறுநகைபெருக்கிமணிமுத்தமாடிச்
செவ்வாய்திறந்துபலர்சீராட்டவளர்குழவிசெங்கீரையாடியருளே
தீரதிரிநேத்ரமுளவீரவநுமந்தனேசெங்கீரையாடியருளே. (௧)

கார்வாய்கருங்கடலுடுத்தமாநிலமகள்கருந்துகில்கிழித்துநீக்கிக்
கலைமகண்மணாளன்றிருக்கோயிலிடுமணிக்கதவந்திறக்கும்வெய்யோன்
சூர்வாய்சுடர்ப்பிழம்பொடுவெளிவரக்கண்டுசுடுபசிக்கிரையிதுவெனாத் [வாவித்
தொழுதகையவன்னைபுகன்மொழிவழியெழுந்துதிண்டோளிணை புடைத்து
தார்வாய்த்தபரியேழுமுலையவருணன்றழுதழுக்கவெறுவெளியிலொற்றைச்
சகடநெறிதரவெதிர்குதித்தாயிரங்கதிர்த்தலைவனைக்கனிகொலென்னாத்
தேர்வாய்க்குளேவிழுங்கிடவாய்திறந்தவன்செங்கீரையாடியருளே
தீரதிரிநேத்ரமுளவீரவநுமந்தனேசெங்கீரையாடியருளே. (உ)

மாயாதபுவனகோடியுமண்டகோடியும்வழங்குபல்லுயிருக்கெலாம் [ள்
மன்னுயிரெனப்பெற்றநின்னுயிர்த்தாதைதிரு மணியிடையிலேறியொருநா
காயாதபிலமிசைபுகுந்தமையறிந்துமுக்கண்ணனொடுகண்ணன்முதலோர்
கருமங்களுஞ்சிதைந்தருமந்தபிரமனார்கைவினையுமோய்ந்துவிடலால்
நீயாதிமுதலென்னவுலகமுன்போலோங்கநின்னிடந்தேடியருளால்
நின்மனக்குறைதீரநன்முனிக்கணமெலாநீடூழிவாழியெனலாற்
றேயாதவலியொடுசிரஞ்சீவியானவன்செங்கீரையாடியருளே
தீரதிரிநேத்ரமுளவீரவநுமந்தனேசெங்கீரையாடியருளே. (௩)

குருமுகப்படையினாலரிமுகப்படையினாற்குளிர்பிறைமுகப்படையினாற்
கொழுந்தழற்படையினாலிந்திரப்படையினாற்கோவேறிவீசுமும்மை
தருமுகப்படையினாலெரிகதிர்ப்படையினாற்சக்ராயுதன்படையினாற்
றருமன்விடுபடையினால்வருணன்விடுபடையினாற்சரமதன்படையாதியா
யொருமுகப்படையாலுமணுகுதற்கரிதானவொளிபெற்றதிருமேமேனில்
ஒருகோடிமாமுனிவரருகோடிவரம்வேண்ட வொருநான்முகத்தெம்பிரான்
திருமுகப்படையொன்றிலருண்முகமலர்ந்தவன்செங்கீரையாடியருளே
தீரதிரிநேத்ரமுளவீரவநுமந்தனேசெங்கீரையாடியருளே. (௪)

காராடுசூரிகுழலரம்பையர்களாடவெங்கதிராடமதியமாடக்
கயிலேசனாடவிதியகிலேசனாடநீள்கருடகிம்புருடராடச்
சூராடுநேமியஞ்சுடராடுசெங்கையச்சுதனாடவடிநிலமிசைத்
தோயாதவிண்ணோர்களோயாதுபாடித்துதைந்தாடவானோர்பிரான்
நீராடுபிலமீதுவாதராசன்சமயநேரறிந்தெளியனைப்போல்
நின்றாடவெல்லவருமன்றாடமறைநான்குநீடூழிகூத்தாடவே
சீராடுதெருமங்கணடமாடவளர்குழவிசெங்கீரையாடியருளே
தீரதிரிநேத்ரமுளவீரவநுமந்தனேசெங்கீரையாடியருளே. (௫)

வேறு.

பழகொளிபொங்கியமணிமகரக்குழைபக்கமசைந்தாடப்
பருவளையரைநூலரைமணியாடப்பதநூபுரமாடக்
கொழுமணியாரமிழைத்தபதக்கக்கோவைபுரண்டாடக்
கொவ்வைக்கனிநிகர்தெய்வக்கனிவாய்க்குறுநகைநிலவாடத்
தொழுதகுகந்தரமணிவடமாடத்தொந்திதளர்ந்தாடத்
தொல்லையரக்கர்தம்வல்லியர்வயிறெரிதூண்டமுழக்கியவா
அழகியநிலையுமிழ்மழகதிர்மாருமகவாடுகசெங்கீரை
அருள்பொழிதிரிநேத்திரமுளமாருதியாடுகசெங்கீரை. (௬)

பாசிலைபொதுளுமுருக்கிலையன்னசுருக்கணிகோல்கொடுமுப்
படிறுமுருக்குவதிட்டமகாமுனிபடிவர்கள்சாலைதொறுங்
கோசிகபடலங்குலைகுலையப்புனைநூலதுகாலணையக்
கொண்டுபுலிச்சிறுகன்றையணைத்துங்கோளரிவன்பறழைத்
தேசிகசுரபியின்முலைநுகர்வித்துமிழைத்தகுறும்புகளாற்
சீரறிவும்பொறையும்பெறுகென்றவர்செப்பியவாய்மொழிகொண்
டாசறுகல்விமகோததிகண்டவவாடுகசெங்கீரை
அருள்பொழிதிரிநேத்திரமுளமாருதியாடுகசெங்கீரை. (எ)

செம்முகமாகியகருடமுகங்குடதிசையினிலிசைபுரியத்
தென்றிசையினினரசிங்கமுகம்பலசெருநரையுயிர்பருகக்
கொம்மைதருங்கவிமுகமதுகீழ்திசைகொண்டுவரம்பொழியக்
கோலவடக்குளகோலமுகம்பலகோடியிருட்களையப்
பெம்முகவுச்சியைநச்சியகுதிரைப்பெருமுகமருவலர்தம்
பேரைவிலக்கமுகந்தொறுமூவிழிபெற்றுநலந்தரலால்
ஐம்முகமொருபதினைந்துகணுள்ளவவாடுகசெங்கீரை
அருள்பொழிதிரிநேத்திரமுளமாருதியாடுகசெங்கீரை. (அ)

முளைமதிபுனைநீர்ச்சடைமுடிவானவன்முன்பேயன்பேறி
முதுவரைமுடிமேற்சிதறியதோர்பொறிகண்டேகொண்டோடித்
தளையவிழ்தாமரைமணமலர்மீதிலனம்போலுந்தேவி
தருவயிறதுவாய்த்திடவருள்வாயுநெடும்பேருண்டாகக்
களிபடுகருமெய்க்கவசமுமாமகுடந்தானுஞ்சோதிக்
கனகுழைகளுமாத்திருவுருவானகரும்பேவண்டேதத்
தெளிபடுபசுநீர்த்துளவணிமார்பகசெங்கோசெங்கீரை
திருவளர்திரிநேத்திரமுளமாருதிசெங்கோசெங்கீரை. (௯)

இழைபடுசிறுநூற்கொடிவழியேறியிறங்காநின்றாடி
யிவர்தருசிறுபூச்சிகளெனவால்வழிவந்தேறுஞ்சேனை
அழகியபெருநீர்ப்பிலமுளதூரமளந்தேகொண்டேகி
அதிலொருபெருமாட்டியையெதிர்பேசிமுனஞ்சாபந்தீரக்
குழைபடுகனிகாய்புனல்வயிறாரநுகர்ந்தேபின்பூரைக்
குவலயமதன்மேற்படவெளிவீசிநடந்தாகங்காரிற்
செழுநிறமுடையாற்கெளிவருதூதுவசெங்கோசெங்கீரை
திருவளர்திரிநேத்திரமுளமாருதிசெங்கோசெங்கீரை. (௧௦)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

# தாலப்பருவம்.

கடிக்கும்பொறிவாயழற்சுடிகைக்கடவுளநந்தன்முடியதிரக்
காழார்மணிச்சூட்டரவெட்டுங்களிறேரெட்டுமுடைந்ததிரத்
துடிக்குங்கொடுந்தீவினைப்பகைஞரிடத்தோளதிரப்பெருந்திரைநீர்
துயிலாவாழிவயிறதிரத்தொல்லைக்கயிலைச்சிலம்பையகழ்ந்
திடிக்குஞ்சுடர்வேலரக்கன்மனமின்னமதிரப்புருகூதன்
இமையாநாட்டம்வலத்ததிரவெழிலியேற்றினிடிக்குரல்போல்
அடிக்கும்பெருமாமணியணிவாலழகாதாலோதாலேலோ
அருள்சேர்திரிநேத்திரவீரவநுமாதாலோதாலேலோ. (க)

பெருநீர்ப்படைகொண்டசுரரைவேர்பிடுங்கியெறிசெஞ்சுடர்ப்பருதிப்
பெருமானிடத்தோர்முதுநூலின்பெற்றியறியவெறுவெளிமேல்
ஒருநீர்ச்சகடுமேழ்பரியுமூனபாதத்தருணனும்பெற்
றுடையதடந்தேருனதுபொறைபொறுக்காமையைக்கண்டுயர்முகட்டுத்
தருநீரருவிதூங்கும்வடசயிலச்சிகரத்தொருதாளும்
தடந்தேர்மிசைமற்றொருதாளுந்தாவியூன்றியவனுரைத்த
அருநூற்கல்விமுழுதுணர்ந்தவறிவாதாலோதாலேலோ
அருள்சேர்திரிநேத்திரவீரவநுமாதாலோதாலேலோ. (உ)

விரைசேர்கனகாசலத்திமையோர்மிடைந்திந்திரனூர்வாலியென்ன
வெய்யோனவனுக்கிளவலென்னவேதன்கரடிநாதனென்ன
இரைசேரனலோனீலனென்னப்பணிசங்காழிதுணைவனென்ன
எம்மானரக்கர்செருக்கழிக்கவிசைந்தநாளிற்படைத்துணையா
யுரைசேர்பிரமன்முதலாகவெறும்பீறாகவுள்ளபல
உயிருக்குயிராகியவாயுவொருத்தனிடத்திலுதித்தகுணத்
தரசேயமரர்பயந்தவிர்த்தவழுதேதாலோதாலேலோ
அருள்சேர்திரிநேத்திரவீரவநுமாதாலோதாலேலோ. (௩)

கழியாத்துணர்ப்பூந்தருவிலிளங்கால்வந்தசைப்பச்சோலைநறுங்
கடிமாமணப்பந்தரினிருக்குங்காட்சியினிற்கல்லோச்சினர்க்குப்
பழிகால்வெகுளிபோலநறும்பழம்விட்டெறிந்துநெடும்பசியைப்
பாழித்தடக்கைத்தன்கிளையோர்பாறத்துடைக்குந்தன்மையைப்போற்
கொழிதேன்பொழிதாரிந்திரன்கைக்குலிசப்படையால்வடுவாங்கிக்
கொடுவாளரக்கர்குலந்துமித்துக்கொலையிந்திரசித்தழுத்தியதோள்
அழியாவடுவைத்துடைத்தகுணத்தபயாதாலோதாலேலோ
அருள்சேர்திரிநேத்திரவீரவநுமாதாலோதாலேலோ. (௪)

வலஞ்சேர்சூலமொருபெருங்கைவாளோர்செழுங்கைமரமொருகை
மலையேந்துவதோர்மணிக்கைகட்டுவாங்கமொருகைதடியொருகை
பலஞ்சேர்முனையங்குசமொருகைபாசமொருகைதட்டொருகை
பருத்ததிணிதண்டமுமொருகைபடைத்தீரைந்துதடக்கைகளும்
பிலஞ்சேர்கனகத்துணைவிழியும்பீதாம்பரமுமேதாங்கிப்
பிரேதாசனமேல்வீற்றிருந்துபிறங்குங்கருடதுரங்கமுள்ளோன்
அலங்காரமும்பெற்றுடையகுணத்தழகாதாலோதாலேலோ
அருள்சேர்திரிநேத்திரவீரவநுமாதாலோதாலேலோ. (௫)

## வேறு.

இலகுமகாவுலகம்பதினாலிவைபதினாலையுமொன்று
யேற்றதோரண்டமவ்வண்டமோராயிரவெட்டுமுடற்பொறைமேற்
பலபலவகைதொறுமொய்ப்பவடுத்தபுறக்கடலின்புடையோர்
பாசிலைமீதினிலேதுயில்கின்றபசும்புயலென்பவனைக்
குலமணியொடுசெந்திருவொடுபுயமிசைகொண்டுகிளம்பியவன்
குவலயமுருவியதிருவடியிணையைக்கோகனகம்பொருகைத்
தலமதிலேந்திவரும்பெரியோனேதாலோதாலேலோ.
தனைபுகழ்திரிநேத்திரமுளமாருதிதாலோதாலேலோ. (௬)

கருவினையொருவியபரமபதந்திருமாளிகையாவதிலே
கருதருமறைநடுகோலாமற்றுளகலைபலவுங்கயிறுப்
பொருவருமழைநிறவண்ணனடித்துணைமேல்மணிவட்டமதாப்
புண்ணியபன்னிருநாமமுமிருசெவிபோதவயிற்றமுதா
அருள்செயெழுத்திருநாலுமிழற்றுபசுங்குதலைச்சொலவா
அறிவினிலறியாவகையறியுஞ்சுகமானதலத்திடையே
தருசிறுதொட்டிலில்விழிவளர்மகவேதாலோதாலேலோ
தனைபுகழ்திரிநேத்திரமுளமாருதிதாலோதாலேலோ. (௭)

துங்கநெடுங்கிரியின்கண்முரண்படுதும்புருநாரதனார்
சொல்லியவீணையின்வல்லபமோதினர்தொல்லையடைந்திடுநாள்
அங்கிசைபொங்கநயங்கொடுபாடிநெகிழ்ந்தகருங்கலிலே
அமையவிருத்தியசமயமுமக்கிசையாலிருவீணையுநீர்
இங்கெடுமென்னமயங்கினர்பாடியெடுத்திடுமாறிலராய்
எந்தைபகர்ந்ததுசிந்தையகந்தையிரங்கெனவாயிடையோர்
தங்கிசைபாடிநல்வீணையளித்தவதாலோதாலேலோ
தனைபுகழ்திரிநேத்திரமுளமாருதிதாலோதாலேலோ. (௮)

மருமணமொழியாத்துளவணிதோளுடையானேவானோர்கள்
மருவியதுயர்நீக்கியகருணாகரமாலேமேலோனே
பெருகியமனுநூற்கொருமணியாகியவாழ்வேதாழாத
பிரளயவுததிகுமுறியபேரொலிபோலேபேரோதிக்
குருவெனநமனாட்டவர்தமைமேல்விடுகோவேமூவாத
குணமுளதிரிமூர்த்திகளருண்மேவியகோமானேபூவார்
தருமடிதொழுவோர்க்கெளிவருகாரணதாலோதாலேலோ
தனைபுகழ்திரிநேத்திரமுளமாருதிதாலோதாலேலோ. (௯)

கவடுடைமணியால்பொதுளியபாசிலைதானாய்மாநாகக்
கடுவுடையழல்வாய்ச்சுடிகையுமாய்வலியாலேசகுனேசன்
உவமையில்பிடராய்ச்சதுமுகனாவினிலோயாதேவாழ்சீர்
உயர்மறைமுடிவாய்க்கௌசலைநாயகியார்நூலேபோலத்
துவண்மணியிடையாய்ப்பரதர்கொள்பாதுகைநேராய்நீர்பாயுந்
துணையடிபடலாற்றிருவுடையானடிசோராதாராயுந்
தவரிதயமுமாய்ப்பொலிபுயபூதரதாலோதாலேலோ
தனைபுகழ்திரிநேத்திரமுளமாருதிதாலோதாலேலோ. (௧௦)

தாலப்பருவம் முற்றிற்று.

# சப்பாணிப்பருவம்.

மின்புறத்திடுமெணிநுசுப்புடைக்குவளைவிழிமிதிலைப்பிராட்டிசிறைசேர்
மிடிதீரமுனிவர்வயிறிடிதீரவெழுபரிவிமானமதுதடைதீரநீள்
தென்புலத்தொருநமனரக்கருயிருண்டுபசிதீரவிடராழிதீரத்
தெருமந்தவாலியாலருமந்ததுணைவனார்திரிகின்றகவலைதீரப்
பின்புறப்பொலிகின்றவிளையபெருமாளொடும்பெரியபெருமாளும்வருநாட்
பெரியதாபதரிவரையரசநீதொழுகென்றுபேசிக்கைகொட்டியதெனத்
தன்புலன்றிரியரசைநிலைநிறுத்தியமதலைசப்பாணிகொட்டியருளே
தக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தசப்பாணிகொட்டியருளே. (௧)

இருவரையுமொவ்வாதபுயவரைகளுடன்மேவுமிருவரையுமெய்தநோக்கி
இதுவரையுமறிகிலோமுதுவரையில்வாலிவிடவேறிவருகின்றவரெனா
அருவரையிலேநுழைந்தொருவரையுமறியாதடங்குசுக்ரீவன்முதலாம்
அவரவரையஞ்சலென்றிவரையெவரெனயானறிந்துவருகின்றவரையும்
பருவரையிலிருமெனத்திருவரையிலுரியொடும்பருத்தவில்வரையினோடும்
பகைவரையடர்க்கவருதலைவரையடுத்துப்பணிந்தவரையறியவேண்டித்
தருவரையில்வேதியர்கள்சிறுவரைநிகர்த்தவன்சப்பாணிகொட்டியருளே
தக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தசப்பாணிகொட்டியருளே. (௨)

காணின்றதலைவர்பகைமேனின்றசிலையர்முக்கடவுளரிலிவரிருவர்நாங்
காணவருவாரல்லர்வேணதொருபொருளினைக்கையினிலிழக்கவிட்டார்
போனின்றதென்னகுறைநானின்றுகேட்பதிப்பொழுதென்றுநணுகிநீர்தாம்
புகுதுமூர்யாதுமுனிருந்தவூர்யாதுமதுபுகழ்நாமம்யாதெனமகிழ்ந்
தேநின்றவிளையவனுதித்தநாண்முதலனையெதிர்த்தநாளளவுமிவையென்
றெல்லாமுரைக்கமிகநல்லானெனக்கண்டிராமனையுமிளையவனையுந்
தானின்றுவழிபடுவிதந்தனைக்கேட்டவன்சப்பாணிகொட்டியருளே
தக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தசப்பாணிகொட்டியருளே. (௩)

கரணந்துலங்கியமறைச்சிறுவனானன்றுகதிரவன்சிறுவனுக்கோர்
காவல்புரிகவியிலொருகவிநானுமைக்கண்டுகருவிகரணாதியெல்லாம்
முரணின்றியுழல்வோனைவெருவாமலிருவெனமுழஞ்சில்வைத்தனனெனக்கே
முன்னுருவமிதுவென்றுவிண்ணுலகுமண்ணுலகுமுட்டியசெயற்கைநோக்கி
கிரணம்படைத்தகுண்டலவதனமுங்கண்டுகிடையாதவிவனமதுபாற் [க்
கிட்டவந்ததுநல்லவிட்டமெனவுளமகிழ்கிளைத்தமன்னவரைமுன்போய்ச்
சரணங்குனிந்துகும்பிடவந்தகைகளாற்சப்பாணிகொட்டியருளே
தக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தசப்பாணிகொட்டியருளே. (௪)

வெருவாதபெருநன்மைவருநாளிலொருவர்பால்வினவிவாராதுபிறிதாய்
மீள்கின்றநாளினுஞ்சொல்லிமீளாதிதுவிதிக்கிழமையிளையகோவே
வருநாளிலொருபருதிமகனையெதிர்நாளுமறம்வளர்நாளுநிருதர்குடிபோய்
மாளுநாளுஞ்சனகிமீளுநாளும்பரதன்மகிழ்நாளுமிவன்வந்தநாள்
ஒருநாளிலெய்தினமெனக்களிதுளும்பநின்றுள்ளமகிழ்பூப்பவருள்பூத்
தொழுகிடுமிராமனருளும்பொருளுநாடியெனதுறுகதிர்மகற்கரசுதான்
தருநாளிதோவென்றபெருநாளுடைக்குரிசில்சப்பாணிகொட்டியருளே
தக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தசப்பாணிகொட்டியருளே. (௫)

வேறு.

தேடியவொண்பொருணுடியடைந்ததுபோலவணைந்தனையாற்
செங்கதிர்மைந்தனெவன்பெயரோதவைதெரிவுறவோதெனலும்
பாடியில்வாலிதனாலடியுண்டுதனேடியல்மங்கையொடும்
பதியும்வளம்பெறுநிதியுமிழந்துபதைத்தனனவன்முகமே
வாடியசெய்திதெரித்தனெனச்சொலிமற்றவரருள்கொடுபோய்
வாலியுயிர்க்கொருகாலனடுத்தனன்மன்னவவென்னமிகக்
கூடிமகிழ்ந்துளாயாடியகோளரிகொட்டுகசப்பாணி
குருகெழுதிரிநேத்திரமுளமாருதிகொட்டுகசப்பாணி. (௬)

பருதிகுலத்திறைதசரதனுக்குளபாலகர்நால்வரிலிப்
பண்ணவரிருவரிராமரிலக்குவர்படர்கள்செய்தாடகையைப்
பொருதிகழ்சிலையுயிர்செய்தொருசிலையைப்பொடிசெய்துமனைவியுடன்
பொன்னகர்நணுகியொரன்னைசொல்வனமிசைபோந்தொருமான்பொருளாக்
கருதிமடந்தையையொருநிருதன்கொளநின்றகவந்தனையுங்
கன்றியொர்சபரிசொல்குன்றிடைவந்தனர்காணிவருன்பகையைக்
குருதியிலாட்டுவர்வருகெனுமந்திரிகொட்டுகசப்பாணி
குருகெழுதிரிநேத்திரமுளமாருதிகொட்டுகசப்பாணி. (௭)

ஆதவன்மைந்தவிதோர்மொழியுங்கடவாதுநடந்துகொணீ
யண்ணலைமாமணிவண்ணனைநண்ணுதியபயமெனக்கொடுபோய்ப்
பாதம்வணங்கிநீதந்தருளின்றிவன்மாதுநெடும்புவியும்
பாரினில்வாலிதனாருயிர்மாய்வதுபாரமராமரமேழ்
பூதலமேலுருவும்படிகண்டவனாலெனவோதுமுனே
பொருசிலைராகவன்வரிசிலையால்விடுபூமுகவாளிபடக்
கோதறுமாமரவீழ்த்தியறிந்தவகொட்டுகசப்பாணி
குருகெழுதிரிநேத்திரமுளமாருதிகொட்டுகசப்பாணி. (௮)

இதுபுனைபாடகமிதுசிறுசூடகமிதுவிரன்மோதிரமால்
இவைபலதாழ்வடமிவைபலபூடணமெனவகைசேரவெடுத்
ததுமயமாய்மனமுருகுமிராமனையடிகளிதேதுகொலாம்
அனைநொடியாமுனமிதிலைநன்னுடியையணைகுதிநீயுமரோ
உதவுவல்யானெனவருகதிர்மாமகனுயர்முடிசூடியநாள்
உனதடியேவல்செய்திடமழைபோனபினுதவுவனேகுகெனக்
கொதிசினவாலிதன்மதமுடிவித்தவகொட்டுகசப்பாணி
குருகெழுதிரிநேத்திரமுளமாருதிகொட்டுகசப்பாணி.

காளவிடம்பொருமேககுலஞ்செய்விகாரம்விளைந்தமையாற்
கண்ணனருட்கொடுநண்ணியபின்கலிகாலம்விளைந்ததெனக்
கேளலறக்கிரிசாயமலைக்குலமீடழியப்பொருகிட்
கிந்தைதளர்ந்திடவங்கதனெஞ்சுகிழிந்திடவானரர்போய்
ஊளையிடக்கதிர்மாமகனுவியுலைந்துலகாதியெலா
முளறிடவெண்கரிபிளிறிடமுன்மொழியோதியநாளிலிளங்
கோளரிவந்ததைநாணியகேசரிகொட்டுகசப்பாணி
குருகெழுதிரிநேத்திரமுளமாருதிகொட்டுகசப்பாணி. (௧0)

சப்பாணிப்பருவம் முற்றிற்று.

---

# முத்தப்பருவம்.

பெருமைத்துணைவேள்சினங்காட்டிப்பேசுமுனந்தாரையைக்காட்டிப்
பிறகேநின்றுமுகங்காட்டிப்பெரியோயருளைப்பிழைத்திலமென்
றிருமைப்பொருளுஞ்சொலிக்காட்டிச்சாம்பன்கவையன்கவையாக்கன்
இடபன்சரபனளன்சேனாதிபன்சேடனன்கேசரிகுமுதன்
அருமைத்துரையங்கதன்மயிந்தன்துமிந்தன்வசந்தன்முதலெழுபான்
அடல்வானரவாருதிநடுவேயரசன்செலச்சென்றண்ணலிரு
முருகிற்சிவந்தபதந்தொழுதமுதல்வாமுத்தந்தருகவே
முக்கணழகாவநுமந்தமூர்த்திமுத்தந்தருகவே. (௧)

படிமீதினிற்றென்றிசையறிந்துபாய்ந்துமீளக்கடவனென்று
பகவன்கொடுத்தவடையாளம்பரிந்துவாங்கிச்சுக்ரீவன்
நெடிதாம்வழிசொல்லியவாறேநேர்ந்துபலதேயமுங்கடந்து
நிறைந்தசேனைநீர்வேட்டநிலைமையறிந்துநெடும்பிலத்தின்
அடிபோய்ச்சுயம்பிரபைதனைக்கண்டயர்வுநீங்கிமேலேறி
யடற்சம்பாதிநெறியுரைக்கவறிந்துசிறந்தமகேந்திரத்தின்
முடிமேனின்றுங்கடல்பார்த்தமுதல்வாமுத்தந்தருகவே
முக்கணழகாவநுமந்தமூர்த்திமுத்தந்தருகவே. (௨)

படியைக்கிழித்தமுதுவரைமேற்சாம்பனடிநாட்பிறப்புணர்த்தப்
பாவித்தெழுந்துதனிவிசுவரூபத்துடனேபாய்ந்துகடல்
வடியக்கிழித்தமைந்நாகவரையைக்கிழித்துவளர்சுரசை
வாயைக்கிழித்துவெளிகிழியவருமங்காரதாரையெனுங்
கொடியைக்கிழித்துத்தென்னிலங்கைக்குவட்டைக்கிழித்துவடவாயிற்
கோட்டைக்காவலிலங்கணிதன்குடலுமுடலுங்கிழியவவள்
முடியைக்கிழித்தபெருந்தடக்கைமுதல்வாமுத்தந்தருகவே
முக்கணழகாவநுமந்தமூர்த்திமுத்தந்தருகவே. (௩)

தொடுக்குமெழில்சூழிலங்கைதனிற்சனகியிருக்கைதனையறியச்
  சுடர்ச்சூளிகைமாளிகைமேடைசோலைசாலைவனஞ்சதுக்கம்
அடுக்கல்மடமண்டபமொழுங்கையரணம்பலகோபுரந்தெருக்கள்
  அகழிமதில்மாடங்கூடமரசனிருக்கையமைச்சிருக்கை
படுக்கையிங்காவணந்தெற்றிபவனங்கவலையுத்யானம்
  பலவுநுழையக்குறுவடிவம்படைத்துப்பிரமனறியாத
முடுக்குந்திரிந்துவருமலர்த்தாண்முதல்வாமுத்தந்தருகவே
  மூக்கணழகாவநமந்தமூர்த்திமுத்தந்தருகவே. (௪)

நகத்திண்புயத்திந்திரசித்தினகுங்கோயிலைக்கண்டகங்குலைந்து
  நாடற்குரியவீடணன்வாழ்நன்மாளிகைகண்டகமகிழ்ந்து
பகைக்குங்கொடிமூக்கெரிவிழிக்கும்பகன்வாழ்மனையும்பார்த்தகன்று
  பலதன்கிளையுங்கொடுநிரயப்பயிராய்வளர்க்கும்படுபாவி
யகைக்குஞ்சுடர்வேலிராவணனாலயம்போய்மயன்பாவையைநோக்கி
  அன்னைதனைப்போலுன்னினன்யானந்தோவந்தோவென்றுசெங்கை
முகத்திலறைந்துவெளிபாய்ந்தமுதல்வாமுத்தந்தருகவே
  மூக்கணழகாவநமந்தமூர்த்திமுத்தந்தருக்வே. (௫)

வேறு.

அரமிட்டசுடர்வேலிரக்கமிலரக்கனெனதன்னையையெடுத்துவரிநீர் [கொடியார்
  அலையிட்டனன்கொலொரு மலையிட்டனன்கொல்வா னகமிட்டனன்கொல்
புரமிட்டனன்கொலெவ்விடமிட்டனன்கொலென்றறிகிலே னென்றுபொருமி
  புலமிட்டவுணர்வுசஞ்சலமிட்டபொழுதிலொருபொங்கமொதிரிட்டுநிலவக் [ப்
கரமிட்டபுலிமுன்மான்கன்றிட்டதாமெனக்கவலையிட்டுருகுஞானக்
  கண்ணனையரக்கர்குலகாலனையிராமனிருகண்மணியைவாழ்த்திவாழ்த்தி
விரலிட்டவண்ணன்மோதிரமிட்டதூதாளிமென்பவளமுத்தமருளே
  மிக்ககதிதருகின்றமுக்கணுடைய நமந்தமென்பவளமுத்தமருளே. (௬)

படிபட்டவாறெலாமுறைபட்டவாறேபகர்ந்தொருமதிக்குமுன்னே
  பறைபட்டபுல்லரிடுசிறைவிட்டிடக்கடவைபண்ணவவெனக்கொடுத்த
முடிபட்டமணிகொண்டுநெறிபட்டமரமெலாமுறிபட்டிடக்காவலோர்
  முன்பட்டிடத்தலைவர்பின்பட்டிடப்பொருமூரட்சம்புமாலிநமன்வா
யடிபட்டிடச்சேனைபொடிபட்டிடத்தரையிலட்சயகுமாரனுடல்போய்
  அரைபட்டிடப்பிறகுநுதல்பட்டபொட்டெனவணிந்ததையறிந்துசெவிபோய்
வெடிபட்டராவணன்கொடிபட்டமரமேறிமென்பவளமுத்தமருளே [ய்
  மிக்ககதிதருகின்றமுக்கணுடைய நமந்தமென்பவளமுத்தமருளே. (௭)

காலாலனேகரிருகையாலனேகர்பாய்கதியாலனேகர்வாகைக்
  கதையாலனேகர்காலுதையாலனேகர்வெங்கரிபரிகளைத்தூறுமோர்
வாலாலனேகரிருதோளாலனேகர்கடிவாயாலனேகரிடுபோர்
  மல்லாலனேகரெறிகல்லாலனேகரிவ்வகையால்விடும்படையெலாம்
கோலாகலம்பெறக்கொன்றுகளமெங்குநரிகூத்தாடவோரிபாடக்
  குருதியாறோடவிந்திரவிரோதியுமுளங்குலையராவணனிடம்போய்
மேலாசனம்போலவாலாசனங்கோலிமேவினோய்முத்தமருளே
  மிக்ககதிதருகின்றமுக்கணுடைய நமந்தமென்பவளமுத்தமருளே. (௮)

நீரெலாமனலுள்ளதேரெலாமனல்போனநெறியெலாமனல்மாதர்வாழ்
நிலையெலாமனல்பெரியமலையெலாமனல்யானைநிரையெலாமனல்காவலோர்
தாரெலாமனல்சேனைமாரொலாமனல்கடைத்தலையெலாமனலரசர்சூழ்
தடமெலாமனல்கோயிலிடமெலாமனல்படைத்தலைவொன்றுலைவிலாத
பேரொலாமனல்நடப்பாரெலாமனலெம்பிராட்டியுறைதருநீங்கலாப்
பெருகியவசோகவனதருவெலாமனலவைபிளந்துகீழோடுகின்ற
வேரொலாமூரொலாமனலூட்டுமடல்வீரமென்பவளமுத்தமருளே
மிக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தமென்பவளமுத்தமருளே. (௯)

காலிட்டகழனிருதனூருக்குவெந்தழல்கதிக்கக்கொடுத்தவனையா
காயத்திலாறுநாளுலையக்கொடுத்தன்னைகவலையின்மனங்கொடுத்து
வாலிட்டவங்கிதனைநீரிற்கொடுத்துமைந்நாகத்தைவிடைகொடுத்து
வழிபார்த்ததுணைவருக்கருளைக்கொடுத்தந்தமதுவனத்திரைகொடுத்துப்
பாலிக்கும்வள்ளலுக்குயிரைக்கொடுத்தடிபதிக்கவிருதோள்கொடுத்துப்
பன்னிருதொகைக்கடிகையளவினங்கதனோடுபாய்ந்துதென்றிசையிலலைநீர்
வேலிக்கண்வெள்ளமெழுபதையுங்கொடுத்தபுயல்மென்பவளமுத்தமருளே
மிக்ககதிதருகின்றமுக்கணுடையநுமந்தமென்பவளமுத்தமருளே. (௧௦)

முத்தப்பருவம் முற்றிற்று.

## வருகைப் பருவம்.

ஓராயிரங்கரத்தொருதூணிடந்தவுணனுதிரங்குடித்தமாலே
யுன்னுயிரையுங்குடிகுடிக்கவந்தனனெங்களுலகப்பிராட்டியைவிடுத்
தீராயிங்கோடிகாலநீவாழ்கெனவிரங்காவரக்கனைமறுத்
தெந்தைநின்சரணடையவந்தனனெனக்குயிரி வன்கொடுத்தனன்முன்னைநா
ஆராயவேறில்லைவீடணனிவன்பேதையன்னைதனதுயிர்புரப்பாள் [ள்
அபயதானம்புரிதியெனமனோரதமுடித்தலையாழிமுதுகின்மீதே
வேரோடுமலைமலைகளாகக்கொடுத்தணைவிதித்தசேவகன்வருகவே
மேருகிரிநிகர்காத்ரதீரமுளதிரிநேத்ரவீரவநுமான்வருகவே, (௧)

சோலைவாய்மணிவரையைநிரைநிரைபதித்தணைதுலக்கியநளன்செருக்கைச்
சூழிட்டவரைகளோரேழிட்டடக்கித்தொடங்குமுதனுட்போரினிற்
காலைவாயவரவர்தனித்தனிகலப்பக்கலந்திராவணன்மயங்கக்
கார்வரையெடுத்திரதசாரதியைமோதியொருகைக்குத்தினெக்குற்றிடப்
பாலைவாய்மணிமருமமுதிரவுதிரப்பெரும்பரவைபரவைக்குளோடப்
பதைபட்டதுன்முகனுமுதைபட்டுமாளப்பரந்துளவரக்கர்தொகையோர்
மேலைவாயிலில்வெள்ளமிருநூற்றையுங்கொன்றுவிட்டசேவகன்வருகவே
மேருகிரிநிகர்காத்ரதீரமுளதிரிநேத்ரவீரவநுமான்வருகவே. (௨)

காலைப்புடைக்கவருபரியைப்புடைத்துமதகரியைப்புடைத்துவலிசால்
கையைப்புடைத்தவுணர்மெய்யைப்புடைத்துக்கடற்படைக்கதிபரையெலாம்
சாலப்புடைத்துமுனைவாளைப்புடைத்துவருதாளைப்புடைத்துமருவார்
தலைகளுஞ்சிலைகளுந்துவசமுங்கவசமுந்தவிடுபொடியாய்ப்புடைத்துக்
கோலைப்புடைத்தவுணன்வேலைப்பயப்பட்டகோவைப்பிடித்தெடுத்துக்
கொண்டோடியண்டரதிபன்கொலுவிருத்திக்குலாவவைத்துயருநெடுவான்
மேலைப்புடைக்குமிருதோளைப்புடைத்தரணவீரகேசரிவருகவே
மேருகிரிநிகர்காத்ரதீரமுளதிரிநேத்ரவீரவநுமான்வருகவே. (௩)

இசையிட்டவயிரத்தடந்தோளிராகவனையேறிட்டுமாறிட்டபோர்
எதிரிட்டராவணனையதிரிட்டிடத்தாக்கியெரிவிழிக்கும்பகருணன்
திசையெட்டும்விடுகின்றதேருக்குநிகரொத்ததேரொன்றுநம்பியேறத்
திண்டோளிலிடசாரிவலசாரிசுற்றிவெகுசேனையைத்தூளியாக்கிப்
பசையற்றகவிவீரர்நசையற்றபடையினிற்பாரித்தசுக்ரீவன்மேற்
பாவிவிடுசூலத்தைவாவியொருகையாற்பறித்துதறிவீசியப்பால்
விசையிட்டமலையொன்றுதோளிலிட்டதிகாயன்மேற்சென்றபுயல்வருகவே
மேருகிரிநிகர்காத்ரதீரமுளதிரிநேத்ரவீரவநுமான்வருகவே. (௪)

கடியுண்டயானைசிலவொடியுண்டயானைசிலகளமுண்டயானையுயிர்போய்க்
கதறுண்டயானைசிலவுதறுண்டயானைசிலகவிழ்கின்றயானைசிலவாத்
துடியுண்டயானைபலமடியுண்டயானைபலசுருள்கின்றயானைபலமேற்
றுள்ளுவதுமதயானையள்ளுவதுமதயானைசுற்றுவதுமதயானையாய்ப்
படியுண்டவாலினுங்காலினுந்தோளினும்பல்லினும்படுகல்லினும்
பற்றினும்பெரியகைக்குத்தினுமுருக்கியப்பாவியதிகாயன்விடுபோர்
வெடியுண்டவொருகோடியானையுஞ்சேனையும்விருந்துண்டகரன்வருகவே
மேருகிரிநிகர்காத்ரதீரமுளதிரிநேத்ரவீரவநுமான்வருகவே. (௫)

பாரோடுதேர்படத்தேரோடுகரிபடப்பரியோடுபெரியாள்படப்
பாய்ந்துவருகின்றதேவாந்தகன்சிலையைப்பறித்திரதசாரதியொடுந்
தேரோடுபெரியோடுமோதியவனைக்கொன்றுதிரிசிரனையட்சயன்போற்
றிருவடித்துணையாலரைத்தரைத்துக்கொன்றுதீக்குநிகர்சுக்ரீவன்மேற்
போராடியங்கதக்குமரன்மேலோடிவருபொருசிலைநிகும்பனங்கைப்
பொறியழற்சூலத்தைமுறிபடமுறித்தவன்புனைதேரிலேறியிருதோள்
வேரோடுசாயவிருகன்னத்திலுந்தாக்கிவென்றசேவகன்வருகவே
மேருகிரிநிகர்காத்ரதீரமுளதிரிநேத்ரவீரவநுமான்வருகவே. (௬)

## வேறு.

தடுக்கும்பிறைவாளெயிற்றவுணர்தலைமூளைகளேவெண்ணுரையாத்
தடக்கைப்பலகைகமடமதாத்தரங்கஞ்சாதித்துரங்கமதா
எடுக்கும்படைகண்மீன்கணமாவிரதம்பலவுமரக்கலமா
வீர்க்குங்குருதிப்பெருங்கடலாலேழுகடலுமுடன்சிவக்கப்
படுக்கும்பகிரண்டமுஞ்சிவக்கப்பார்த்திந்திரசித்துளஞ்சிவக்கப்
பருத்தவரக்கர்தொகுத்தபிணப்பரப்பிலேறிப்பதஞ்சிவந்து
வடுக்கண்சிவந்துகரஞ்சிவந்துவாலுஞ்சிவந்தோன்வருகவே
வளஞ்சேர்திரிநேத்திரவீரமலையேவருகவருகவே. (௭)

உலவாக்கருங்கல்லெடுப்பவனீயொருவில்லெடுக்கவமைந்தவன்யான்
உன்னோடமராடலனெனக்காய்ந்தொறுத்திந்திரசித்தறையவெகுண்
டலகார்வரிவில்லெடுப்பதற்குமாற்றல்சிறியாய்வில்லெடுப்பான்
அருமைப்பெருமானதுநிற்கவளவில்கிளைஞரொடுநினது
குலமீடேறக்கல்லெடுக்கக்குறித்தானொருவீடணனெனப்போய்க்
குதித்துப்பதினாயிரஞ்சாரிகொண்டிந்திரசித்தொருதேர்முன்
மலர்த்தோளிளையானொடுஞ்சுழன்றுவருந்தாளுடையான்வருகவே
வளஞ்சேர்திரிநேத்திரவீரமலையேவருகவருகவே. (௮)

எயிலைப்பொருதப்பிறைமௌலியிறைபோற்பிறைவார்கணைவீசி
யிகலிந்திரசித்தகமெலியவிளையான்பொரலுமிளையானாய்
வெயிலைப்பொருதகணைமழையால்வீசிப்பாசத்தாலிறுக்கி
விலங்கலிலங்கைப்பதிபுகுந்துமீளுங்கொடியனாள்சாய
உயிரொப்புடையபுகைக்கண்ணனுயிர்போய்ச்சாயக்கரிபரிதேர்
ஒன்றோடொன்றுநிலஞ்சாயவொருகும்பகன்போரினிற்கிடந்த
வயிரத்தடியானமன்பசியின்வலியைச்சாய்த்தோன்வருகவே
வளஞ்சேர்திரிநேத்திரவீரமலையேவருகவருகவே. (௯)

பேயாட்டமராயிரங்கழுதைப்பெருந்தேரகம்பன்முகந்தேயப்
பிடியாற்கடியாற்குறுந்தடியாற்பிசைந்துபெருஞ்சேனையையிசைந்து
தீயான்விடுநான்முகன்பகழிசீறவிளங்கோளரியயர்ந்த
செயலைநோக்கிக்கரம்பிசைந்துசெழுநீர்க்கங்கைநாடர்பிரான்
காயாமலர்மேனியைநோக்கிக்கண்கள்பிசைந்துவீடணனாற்
கடிந்தாருயிர்மீட்டிடுஞ்சூழ்ச்சிகழறக்கேட்டுச்சிறைபுடைத்து
மாயாமருத்துமலைதேடிவாவிப்பறந்தோன்வருகவே
வளஞ்சேர்திரிநேத்திரவீரமலையேவருகவருகவே. (௧௦)

வருகைப்பருவம் முற்றிற்று.

---

# அம்புலிப் பருவம்.

[illegible]ற்றும்பசுந்திரைமுகட்டைக்கடக்கலாற்சோதிமுகம்வடிவுடைமையாற்
றூயகலைபலவும்படைக்கையாலாதிநாட்டொட்டுவருசாபத்தினால்
எற்றும்படிக்குடலம்வளரவுஞ்சிறுகவுமிருக்கையாற்பொறிசூழ்பணத்
தெரிவிழியிராகுமேற்பாய்தலாற்கடவுளர்க்கெந்நாளுமுதவியிடலால்
[illegible]ற்றுஞ்சுடர்ப்பருதிபாற்புகுதலாலிவனொடொக்குநீயொக்குமாலே
யுனைவரவெனப்பெரிதுமுறவழைத்தனனின்னொடொத்தவனிவன்பாயுநாள்
ஆற்றும்பெருங்கவலைநீயுமறிவாயிவனொடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௧)

கோளோடுகோளலையவண்டகோளகைமுகடுகுலையமாதிரமுலைப்படக்
கொழுவால்புனைந்தபெருமணிகலன்கலனென்றுகுமுறிமாதிரமொலிப்பத்
தோளோடுதோளாயிரம்யோசனைக்களவுதூக்கிமணிமவுலியண்டச்
சுவராளவுமேனோக்கிவாயிதழ்மடித்துத்துணைக்கரநிமிர்த்துநீட்டித்
தாளோடுதாளுனைத்திருசிறையும்வீசித்தடங்கடலிலங்கையாழிச்
சலதியுட்படுமரக்கலமெனச்சுழலிடத்தடவகியினொருசுடிகைமேல்
ஆளோடுவானநாட்டள[illegible]ாடுபாய்ந்தவனொடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீர[illegible]லீயா[illegible]வாவே. (௨)

பாயுமலைகடலைக்கடந்தியோசனைகளொன்பதினாயிரத்தினப்பாற்
பனிதழுவுமிமயமொன்பதினாயிரத்தொடுபடர்ந்தேமகூடகிரியின்
சேயுயரமொன்பதாயிரமொன்பதாயிரஞ்செறிநிடதமேவியப்பாற்
செப்பும்யோசனைகளொன்பதினாயிரத்தோடுசிகரமகமேருமீப்போய்
ஏயும்யோசனையொன்பதாயிரத்தொடுநீலமலையப்புறத்துநாலா
யிரம்யோசனைக்குளுயர்சஞ்சீவிமலையடைந்தீசனுறைகயிலைகும்பிட்
டாயுமறைபாடிநின்றாடிநாடினவனுடனம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௩)

முன்னையறிதுயில்விட்டயோத்தியிலடைந்துதவமுனிசொலத்தாடகையின்மே
முனிவெய்தியகலிகைக்கருள்செய்துசீதைமணமுற்றியொருபரசிராமன் [ல்
தன்னைவலிவென்றுசிறுதாயருள்வனஞ்சென்றுதகைமானையெய்துசனகன்
றருமானைவிட்டுவானரவாரியோடுகடருண்டியவ்விலங்கையீண்டித் [ந்
துன்னமர்விளக்குமணிவண்ணனருளைக்கொண்டுசுதைமருந்தொன்றுபார்க்கு
தூதனிவன்வாயுமகனநுமானரக்கனைத்துடைகாலனென்றுபுவனத்
தன்னையறியச்சம்புசொன்னதனிமுதல்வனுடனம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௪)

புயல்வாய்கிழிக்குந்தடங்குடுமிமால்வரைப்புத்தேளெழுந்திறைஞ்சிப்
பொருள்வினவவந்ததன்கருமநுதலிக்குறைபுகன்றதனெடுஞ்சாரலிற்
செயல்வாய்கடுங்கணையரக்கரறுபதினாயிரங்கோடிதனையுநூறித்
திண்புயவரைக்குளம்மணிவரையையேந்தித்திரும்பவயோத்தியொருபால்
குயில்வாய்பொதும்பரிற்பரதனெழில்கண்டுகாகுத்தனிவனென்றுவாழ்த்திக்
குரைகடல்கடந்துவந்தமராடுகளமேற்குதித்திரண்டியாமத்துளே
அயல்வாய்மருத்துமலைதனைநட்டசேவகனோடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௫)

கனைவாரளிக்குழற்சனகிகவலைக்கடல்கடந்துகரையேறவிண்ணோர்
கடிநாறுகற்பகக்குடியேறவெழுபரிக்கடவுளுமிலங்கையேறப்
பனைபோலுமேனிமாலியவானுரங்கெடப்பருவால்விசைத்தவிசையிற்
பாதாளகதியேறவளைவாயரக்கர்தம்படைகடென்றிசையிலேறத்
தனைநேரிளங்குமரனுயிரேறராகவன்சபதநிறைவேறவிடுபோர்த்
தடவலியரக்கருடல்கடலேறவானரத்தலைவரொடும்வெள்ளமெழுபத்
தனைவோருமீடேறவுயிர்மருந்தேந்தினனோடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௬)

பொன்னார்மணிக்கடவுண்மாமருந்துதவியபொருப்பினையிருக்கைசேர்த்துப்
பொருகளங்குறுகியிந்திரனெடும்பகைவன்புனைந்தமாயாசீதையால்
என்னாகுமென்னாகுமிவன்மற்றயோத்திதனிலெய்தினாலையன்மீர்காள்
என்றுளமிரங்களவில்வண்டுருவம்வீடணனிசைந்தனனிகும்பலைபுகுந்
தொன்னாரிழைத்தகீழறைகளுமுயற்சியுமுபாயமுமுணர்ந்திறைவர்பால்
ஓதுமுனமேதுபணியேதுபணியென்றுள்ளமூசலாட்டாடவெளிமேல்
அன்னான்வருந்துணையும்வழிபார்த்துநின்றவனோடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௭)

புலைவாளரக்கனீடலைசூழ்நிகும்பலைப்புதுயாகமதுகோலிடப்
போனதையறிந்திளங்கோனொடுதொடர்ந்துபலபூரணகுடங்கள்சிதறக்
கலையாளர்சிதறமந்திரநூல்கள்சிதறமநுகலசங்களோடுசிதறக்
கார்சிதறவிசைநெடுந்தேர்சிதறமுனையும்வெங்கரிபரிபதாதிசிதறச்
சிலைவீரனடுபுயமிருந்துகணைமழைகளாச்சிதறவிந்திரசித்தனார்
சிரமுமுரமுஞ்சிதறவவனுயிருநமனுலகுசென்றுசிதறத்திவலையார்
அலையாழிவண்ணனுறுமிடர்சிதறுமெந்தையுடனம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௮)

எவ்வேலையுங்கால்புகுந்தவேலையில்வந்தவீரைந்துநூறுவேலை
யெனுமூலபலமதனையொருராமன்விடுபடைக்கிரையாகவிட்டவேலை
மைவேலைநிகர்சேனையொடுராவணன்சீறிமயன்வேலைவிடவீடணன்
மடிவேலையிதுவென்றுநொடிவேலையிற்பாய்ந்துவடிவேலையேற்றவிளையோ
கைவேலைவிட்டாவிகரைகின்றவேலையிக்கணம்வேலையைப்பாய்ந்துநான் [ன்
கனமருந்துதவிடுவலெனவிரைந்தேகும்வழிகாலநேமியையறிகிலா
தவ்வேலைமுனிவனென்றவன்வேலைகேட்டவனோடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௯)

...ணில்பலபுவனங்கடந்துலைந்தீருமக்கிறைவராலேவவந்தீர்
இறவாமருந்தொன்றுபெறநாடினீரதுவுமிவ்விடத்தெய்தியிடநீர்
புண்ணியமளிக்குமந்திரமொன்றுகேளுமிப்புனலாடிமீளுமெனவே
பொருமாயைபலவல்லவொருகாலநேமிமுனிபுகல்குளமிறங்கியாடித்
தண்ணிலவுமோடையிற்பிடிமுதலையைக்கொன்றுதள்ளவதுதான்யமாலித்
தையல்வடிவாய்வந்துவெய்யதசமுகன்விடுசெழக்கனிவனுயிர்பருகெனா
அண்ணியொருகுத்திலவனைச்சரிவட்டியவனோடம்புலீயாடவாவே
ஆரமணிதிரிநேத்ரவீரவநுமந்தனுடனம்புலீயாடவாவே. (௧௦)

அம்புலிப்பருவமுற்றிற்று.

## சிறுபறைப்பருவம்.

தூமக்கருங்கொண்டல்விளையாடுதடமுடித்தொல்வரைகள்பலவுநீந்தித் [ழ்
தொன்னாளில்வைத்தபொருளிந்நாளெடுக்கத்தொடங்கினவர்போலமலைவா
நேமிப்பெருங்கடவுள்வழிதரமருந்துறைநெடுங்கிரியையங்கையேந்தி
நெறியேபறந்திரணகளமேலிளங்குமரனிறையாவிகொண்டுவளரச்
சாமிக்குமுயிர்வளரவனைவர்க்கும்வானரத்தலைவர்க்குமாவிவளரத்
தருமமுந்தினம்வளரவளர்வித்துவாருதிதணப்பமலைகொண்டெழும்பிச்
சேமத்தலத்தின்முன்போல்வைத்தகைகளாற்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (௧)

பெருமகனெடுத்தகோதண்டத்திலாயிரம்பெருமூலவெள்ளமடியப்
பேதுறுமிராவணனுமையிராவணனுமிவர்பேசியிடுசூளுறவுகண்
டருமகனையுஞ்சுமித்திரைமகனையும்புரந்தருளுமகனஞ்சனைக்கோர்
அருமைமகனாமென்றுபிரமனருள்மகன்மகனளித்தமகன்வைக்கவெய்யோன்
றருமகன்முதற்சேனைகாவலர்புறந்தரத்தடவால்பெருக்கியிந்தத்
தரையுமிந்திரலோகவரையுமொருமதிலாச்சமைத்திமைக்காமலந்தச்
செருமுகத்தினிலவுணர்வருமுகம்பார்த்தமுகில்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (௨)

உறுசினம்பெறுகின்றதந்தவத்திரனையுஞ்சிசுவத்திரனையுநீர்போய்
ஒலிகடலிலங்கையிற்சமர்புரியிராமனையுமொருதம்பிதனையுமின்னே
பெறுமனைக்கணமதிற்கொணர்திரெனமையிராவணன்விடைகொடுப்பவந்தோர்
பேரண்டகூடமளவியவாலினாலிடுபெருங்கோட்டைதன்னைநோக்கிக்
கறுவுடைப்பெருமையைக்கண்டுமுடியாதென்றுமீண்டொருவனோடவலிசால்
கல்லொத்தபல்லிற்கறிக்கத்தெறித்துக்கனங்குறைந்தொருவனோடைச்
சிறுமயிர்க்கடையுமோடாவாலுமுடையபுலிசிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (௩)

அடிநிலந்தோயாதவலகையுந்துயில்கூருமரையாமநேரமதிலே
அணுகுவான்மையிராவணனுண்மையுண்மையிதடிக்கடியுறக்கமின்றிப்
படிபுகழுமிருவரையுநனிபுரந்தருளென்றுபாரிவரும்வீடணன்போற்
பாரிக்கவால்பிரியுமோரத்தினிற்போந்துபடுமாயநீறுவீசித்
துடியளவிலாழியந்துயில்விட்டோனையுந்துயில்விட்டதம்பிதனையுந் [ச்
துயில்கொளப்பேழையிற்கொடுபாதலஞ்சென்றதுட்டன்முடிதட்டவேண்டி
செடிமயிர்த்திரள்படமுறுக்கியதடக்கையாற்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (௪)

மேருவரையைப்பொருவுமிமயவரைமாட்டொருவிரிந்தபுட்கரணிநடுவண்
விரியாயிரந்தோட்டுவனசநாளத்துளைவிளங்கியபிலத்துவழிபோய்ச்
சாருநெறிவந்ததுர்த்தண்டிதண்ணீர்நிறைதசும்பினிற்றவளையுருவாய்த்
தாட்டிகவிலங்கைபடுகோட்டையினுழைந்தொருதராசுமதிலைத்தகர்த்துப்
பேருருவினறுபதாயிரகோடிபடையும்பிசைந்துமுன்கடல்பாயுநாள்
பில்கும்வேர்வைத்துளிவிழுங்கிமகரம்பெற்றபெருமச்சவல்லபனெனச்
சேருமகனைத்தழுவிவாரியதடக்கையாற்சிறுபறைமுழக்கியருளே
சீாத்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (௫)

துங்கவெண்பிறைவாயமைச்சர்நாலிருவரொடுதொல்படையைமடியவைத்து
துலையரண்டமுழுவுபாதலவிலங்கைப்புரிசைதூளிபடமோதிவைத்துப்
பங்கியெரிமையிராவணனும்வண்டேழும்படப்படநொறுக்கிவைத்துப்
பரவுதுர்த்தண்டிமகனீலமேகற்கரசபட்டமுங்கட்டிவைத்துத்
தங்குமொருகாளிபலியிடவைத்தவிருவரைத்தடமுடியில்வைத்தெழும்பிச்
சார்தருபிலத்துவழியேறிவீடணன்முதற்றலைவர்வழிபார்த்திரங்கச்
செங்களந்தனில்முன்புபோல்வைத்தகைகளாற்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (௬)

விறல்சேரிலக்குவப்பிராணதாதாவமிதவிக்ரமன்பற்குனசகா
விஜயராமேஷ்டனநுமான்மகாபிலனோடுவிரிதசக்ரீவதற்பன்
துறவாதசீதைசந்தேசனுததிக்ரமணன்வாயுபுத்திரனஞ்சனு
சூநுவொடுபிங்காட்சனென்றுமுன்னான்குவகைசொன்னமந்திர முன்னினோ
பிறவாதவின்பந்தினைப்பொனவானரப்பெருவாரியேத்தெடுப்பப் [ர்
பேராயிரங்கொண்டபெருமாளையுந்துணைப்பெருமாளையும்பழிச்சித்
திறலார்கரங்குவித்தயனின்றசேவகன்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (எ)

மையிராவணனகலவேறிராவணன்மீறிவருபோரிலிந்த்ரனருளால்
வலிமாவிறுக்கிமாதலிதேர்விடுக்கமணிவண்ணனைதநண்ணியேறிச்
சயவீரமார்த்தாண்டசண்டப்ரசண்டகோதண்டத்தைவளையவாங்கி
தருகாலவீறுருத்திரரூபமாகிவிடுசரமெலாநெரியவீசி
அயன்வாளிகோலியெண்டிசையானையின்கோடறைந்தமணிமார்புருவவிட்
டசுரேசனழியாதவுயிர்காவுகொண்டதையறிந்தமரரார்ப்பரிக்கச்
செயராமசெயவென்றுகொட்டியதடக்கையாற்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (அ)

வாதையறவருணன்வழிவிட்டசோபனமணைவகுத்தசோபனமிலங்கா
வாயிலைவளைத்தசோபனம்ராவணன்றோற்பவருகும்பன்விழுசோபனம்
பேதையதிகாயன்முதலிந்திரசித்துவுமிளையபெருமாள்கையொளிவாளியாற்
பிறங்குயிரிழந்தசோபனம்வெள்ளமாயிரம்பெருமூலமடிசோபனம்
தாதைநான்முகன்வாளிவள்ளல்விடவீரைந்துதலையும்பனங்குலையெனத்
தரைமீதுருண்டிராவணன்மாண்டசோபனஞ்சகலசோபனமுமோதிச்
சீதைசோபனநல்லசோபனமெனச்சொன்னோன்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (கூ)

மாயிருஞ்சோகப்பெருஞ்சிறையரக்கியர்கள்வந்திடவிரக்கம்வந்து
மணியணியலங்காரவகைவகைபுனைந்தன்னைவருகெனவிளம்பிவந்து
பாயிரும்பஃறொடியரம்பையர்பரிக்கும்பருஞ்சிவிகைகொண்டுவந்து
பரிசிங்கவணைசுமித்திரைசிங்கமொடுபோய்ப்பதம்பெறவமைத்துவந்து
நாயகன்பேரளவும்வீடணனிலங்கைக்குநாதனெனவைத்துவந்து
நங்கைதிரிசடையாதிமங்கையர்குழாந்தொடரநாதனருண்மீதுவந்த
சேயிதழ்க்கமலப்பிராட்டியொடும்வந்தவன்சிறுபறைமுழக்கியருளே
சீர்த்திபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (க௦)

பேரிரவிகுலராமன்விடுமோலைகண்டிடும்பிரமனிந்திராதிமறலிப்
பெருமான்முதற்றேவரொருகும்பகர்ணன்பெரும்போரில்வந்தெதிர்த்துச்
சாருமோர்வசந்தனவருலகுளானெனிலவன்றன்னையஞ்சனையின்மகன்
தன்வசத்தினில்விடுதிர்விடுதிரெனும்வாசகந்தந்தவத்திருமுகத்தைப்
பாரமுடிதனில்வைத்துவெற்பெட்டுமகிலப்பரப்புக்குமுட்டியெட்டிப்
பாய்ந்துநமனுலகிலடிதோய்ந்துநரகத்துள்ளபலவருமருங்கதியினிற்
சேரவரிகரியென்றுரைத்தகுருநாதனேசிறுபறைமுழக்கியருளே
சீர்ததிபுனைகின்றதிரிநேத்ரவநுமந்தனேசிறுபறைமுழக்கியருளே. (கக)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

---

# சிற்றிற்பருவம்.

தடிவேற்கரத்துச்சமனைவசந்தனைக்காட்டெனவாவினிற்சுருக்கித்
தகையிந்திரனூர்தேடியவன்றனையுஞ்சமனோடுடன்சுருக்கிப்
படிநான்மறையோன்புவிதேடிச்சமனிந்திரனோடவனையுமப்
படியேசுருக்கித்திருக்கேள்வன்பதத்துள்ளானையெதிர்ந்தேந்திக்
துடியேதிரும்பியவரவனைத்தொல்லைப்பதியில்விருத்திமுன்னாட்
சுடரிலெழுந்துவருஞ்சனகன்றோகைபோலப்புட்பகத்தின்
அடியேவசந்தன்றனைக்கொணர்ந்தவரசேசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (௧)

மதிவாணுதற்சானகியேறவள்ளலேறத்துணையேற
வானரேசர்பலரேறவசந்தனுடனேயிசைந்தேறிக்
கதிர்மாமணிப்புட்பகத்தேறிக்கடன்மேலேறிக்கரையேறிக்
கடவுளருளாலடலேறிக்கலைநீர்க்கங்கைக்கரையேறிப்
பதிவார்சடையாரணியமிசைப்பன்மாமணிச்சுட்டரவேறப்
பகையாவகைநாண்மதியேறப்பரித்தவிசுவநாதனையோர்
அதிவேகத்திற்கொணர்ந்தேறுமரசேசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (௨)

கங்கைசனகிகைப்பிடித்தகாதனடித்தாமரைப்பிடித்து
நகர்க்குநடக்கும்வழிபிடித்துநலமேவியபுட்பகத்தேறி
மங்கைமகிழ்கிட்கிந்தைமலைமடவாரினஞ்சேரப்பிடித்து
வரையுங்கரையுங்கடந்துவனவாசன்பரத்துவாசனிடஞ்
செங்கணெமாலமுதுசெயுந்திறத்திற்பரதனுயிர்சிறுத்தத்
தேர்க்குமுனநம்மூர்க்கணுகித்திரும்பவேண்டுமெனப்பெருமான்
அங்கைமணியோதிரம்வாங்குமரசேசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (௩)

கையிற்செபமாலிகையுமுரியுடையுஞ்சடையும்புறந்தாங்கிக்
கண்ணனளித்ததிருவடியைக்கரத்துஞ்சிரத்தும்பெறத்தாங்கி
மெய்யன்வருங்கொலிரவிகுலவேந்தன்வருங்கொலீரேழு
விதித்தவருடஞ்செல்லுதற்குவேண்டியுளன்கொலிலக்குமன்போல்
மையிலடிமைபெற்றிலன்யானனல்வாய்மூழ்கக்கடவனென்று
வலஞ்சூழ்பரதன்முன்னமலன்வந்தான்பெருமான்வந்தானென்
ஐயவெனப்போய்முழக்கியவாயழகாசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்ரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (௪)

கனைக்கும்புனற்சித்திரகூடங்கடந்துவனங்கள்பலகடந்து
கலைமானெய்தகுலமானைக்கள்ளவரக்கன்கொளக்கரைந்து
நினைத்தவழியிற்கவந்தனுயிர்கவர்ந்துசடாயுவினைமுடித்து
நீண்டகதிரோன்மகற்கரசிறுவியெழுபான்வெள்ளமுடன்
முனைக்குமரக்கர்குலத்துமித்துச்சனகியுடனேபரத்துவனு
முனிபாலணைந்தானெனக்குகனூர்முன்னேயுரைத்தபடிபரதற்
கனைத்துமுணர்த்தியுயிர்காத்தவமுதேசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்ரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (௫)

ருகத்திற்கண்டுபரதனிடமணிமோதிரங்கொண்டண்டரண்ட
முகடுகிழியவெழும்பியெம்மான்முதலோரமுதுசெயுமிடத்தில்
உகைத்துப்பாய்ந்துபரதனின்னமுளனென்றுரைத்துமணிவண்ணன்
உதவுந்தெய்வப்பரிகலங்கொண்டுயர்கானகத்தோர்புடையேறிப்
புகழ்ச்சிபெறவுண்டிடப்பலவானரவீரருமோரிலையிலையாய்ப்
பொருந்திநுகரத்துவாதசியிற்புவியோருண்டுகதியடைய
அகத்திதனக்குங்கதிகொடுத்தவறிவாசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (சு)

வடித்தாய்முனிவன்பரத்துவனைவழிக்கொண்டொருகங்கையிற்குகனை [ன்
வழிமேலெதிர்கொண்டயோத்திதனின்மணித்தேர்மிசைப்போய்பரதனுட
துடித்தேவருசத்துருக்கனையுந்தோளாலணைத்துத்தாய்மூவர்
துணைத்தாமரைத்தாள்வணங்கிமன்னர்சூழப்பலபல்லியமுழங்கக்
கடிப்பூமலர்விண்ணவர்பொழியச்சனகியொடுவொளரியணைமேற்
கதிர்மாமகுடம்புனைந்துலகைக்கனகபுயத்தேந்தியபெருமாள்
அடித்தாமரையேந்தியமதலாயடியேன்சிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (எ)

இமைக்குமிரவிக்குலப்பெருமாளிளையபெருமாளிறைப்பெருமாள்
இவருமெழுபதானவெள்ளத்தெவரும்புயத்திலேறிவ்ரச்
சமைக்குமுவரிக்கடலாதிநான்குகடலுந்தாண்டியந்தச்
சதமாமுகராவணன்படைக்குச்சகலபடையுநெரிந்தமையிற்
குமைக்குங்கணைகள்சீதைவிடவவனுருயிர்போய்ப்பிறக்கவந்தக்
கொடியான்வாளியிறைவிமிசைக்குறுகாதொருகோட்டையைவிளைத்தாங்
கமைக்கும்பெருவாற்பெருமானேயடியேன்சிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (அ)

வனஞ்சேரிராமன்றனைக்கண்டவழியிலொருவிச்சுவரூபம்
மலைமேலேறிக்கடல்பாயவகுத்ததொருவிச்சுவரூபங்
கனஞ்சேர்சீதைக்கடையாளங்காட்டியொருவிச்சுவரூபங்
காணுமருந்துமலைதேடிக்காணவொருவிச்சுவரூபம்
இனஞ்சேர்பாதாளத்தின்மகனெதிர்ந்ததொருவிச்சுவரூபம்
ஈரைம்பதுவாயரக்கன்மிசையெதிர்த்தவிசுவரூபமுதல்
அனந்தவிசுவரூபமுளவதுலாசிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (கூ)

சோதிப்பரமனருள்வித்தாய்த்துதியஞ்சனையாற்குறுமுளையாய்த்
தொல்லைநிலமேந்தியதருவாய்ச்சுக்ரீவனுக்குமுழுநிழலாய்
நீதிப்பெருமானடித்துணைதோய்நீண்டகவடாய்ப்புகழ்வேத
நெறிதேரனந்தசாகைகளாய்நிகழுந்தருமத்தரும்பினதாய்
ஒதித்தெருட்சிமலரினதாய்வீரச்செழுந்தேனொழுக்கினதாய்
உலவாவடிமைப்புள்ளினங்களுண்ணவுண்ணவுவட்டாத
ஆதிப்பரமபதக்கனிதந்தருள்வாய்சிற்றில்சிதையேலே
அனகாதிரிநேத்திரவீரவநுமாசிற்றில்சிதையேலே. (கo)

சிற்றிற்பருவம்முற்றிற்று.

# சிறுதேர்ப்பருவம்.

பைங்தோட்டுமுகைவிரிபசுங்கொன்றைசூடிப்பரிக்குலமறைக்குலமதாப்
பாயொளிப்பரிதிமதிவண்டிலாமேருப்பருப்பதம்வரிச்சிலையதாக்
கொங்தேறுமழல்பூத்தகுடுமிப்பெரும்பகழிகொண்டல்மணிவண்ணனுச்செங்
கோகநகவாலயத்தேகனொருவலவனுக்கொளுவுநாண்வாசுகியதாப்
பிந்தாதபாரேழுநடுவணைப்பலகையாப்பேரண்டகூடமுகடாகாப்
பேதித்தமுப்புரணாவாதிக்கவேண்டிப்பெருக்கப்பெருத்துநீண்ட
செந்தேருருட்டினோன்றந்ததிருமைந்தனேசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௧)

இயல்பானநாதமாய்வேதமாய்மூலமாயெண்ணெண்கலைக்காதியா
யெக்கடவுளுக்குமெக்கருமங்களுக்குமெய்ப்பொருளுக்குமுதன்மையாகிப்
புயலானகருடபூபதிகுலம்விளங்கவருபுத்தேளுமாகியொப்பம்
போடுதற்குங்கீர்த்திதேடுதற்குந்துதிபுகழ்ந்துகொண்டாடுதற்குஞ்
சுயமானகாலக்கணக்கெழுதுதற்குஞ்சுராதிபனையாள்வதற்குஞ்
சூத்திரதரனனதிரிநேத்ரவநுமானென்றசொற்படிநடாத்துநெல்லைச்
செயராமலிங்கனுக்கமுதமாகியகுழவிசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௨)

பாசிலையரம்பையம்பழுவத்துநாப்பட்பசுத்தநெட்டிலையகமுகம்
பாளைவாள்கைக்கொண்டுசிறுகுறுந்தோட்டுப்பலாக்கோடுசாயவறுகால்
மூசுமதுவட்டமேபலகையாகக்கொண்டுமொய்த்தும்பையருவிசூடி
முன்னைப்படர்ந்ததுணைவண்ணச்செழுஞ்சிறைமுருக்கியபழிக்குமீளக்
காசுதெறுகாந்தளந்துகில்வீக்கிவளையெலாங்கறுவியாகாயத்திலா
கண்டலன்பதிநோக்கிவிண்டலம்புகுவளைகடுப்பவளனெழுகுசாரல்
தேசுபெறுதிருவஞ்சனத்திரியில்வருகுழவிசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௩)

பாடேறுமொலிதிரைப்பகுவாயமகரப்பணைக்கோடுபோன்றநெட்டைப்
பாசிலைமுடத்தாழைமலர்மலர்ந்துவரிப்பசும்புலானாற்றமாற்றக்
காடேறியாற்றுதயின்றதெள்ளமுதினைக்காலுவனபோன்றெங்கணுங்
கடிநாறுபுன்னையஞ்செடிதோறுமுத்தீன்றுகடல்மேலிறைப்பவலைவாய்க்
கோடேறிமுத்தீன்றுகரைமேலிறைப்பக்குடீஇயவெண்சோதிமூடிக்
கொண்டநகரைக்கண்டுசெஞ்சோதியாகக்குறித்துமுடிமணியிறைத்துச்
சேடேசன்வழிபடுமனந்தமங்கலவாணசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௪)

நீரழுங்காமலுலகன்னைபன்னாட்பெறநிரம்புசூன்முற்றியீன்ற
நீணிலவளாகத்துமன்பதைகளெல்லாநெடும்பசிக்கனலேயினாற்
பாரழுங்காமற்சுரந்தொழுகுசையப்பருப்பதமூலைத்தடத்திற்
பாலாறெனப்பெருகுகாவேரியாறுபாய்பழனத்திலுழுநீட்டங்
கூரழுங்காதகோட்டெருமையேறுழுபாடல்கொண்மூவிடைப்பரந்து
கோதில்யாழ்வல்லகந்திருவரமுதப்பாடல்கொள்வதுகளிக்குமேன்மை
தேரழுந்தூர்தனிலுமேயெழுந்தருள்குழவிசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௫)

அஞ்சிறைத்தும்பிபாட்டயருந்துழாய்மௌலியண்ணலுமருச்சுனனுநீர்
அணிதெண்டிரைப்புணரியாடிவருநாளிலங்காபுரிக்கணைவகுப்பு
மஞ்சிவருமேனியானுந்தச்சரக்கூடமாயணைவகுப்பனென்ன
வாருதிக்கரைதொட்டிலங்கையளவுங்கட்டும்வாள்விசயன்மதமடக்கப்
பஞ்சவர்சகாயநினைநினையக்கணத்தினிற்பகிரண்டகூடமட்டும்
பாய்ந்துசரபஞ்சரம்பஞ்சுபஞ்சாய்த்துகள்படப்படநொறுக்கிநீண்ட
செஞ்சிறைத்துணைகுவித்தயனின்றசேவகன்சிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௬)

இயல்குணத்தநுமனிவனொருவனிக்கவிவெள்ளமெழுபதுமதித்தவனை நீ
யென்னினைந்தென்செய்தாயேழாயெனக்குறிப்பாலிவைவிளம்பியின்னும்
பயனுறுசரக்கூடம்வனையென்னவனுமநீபாய்ந்துபாரொன்னவந்தப்
பஞ்சரத்தினின்மாயனங்கொளித்திடமுன்படிக்குக்குதித்தெழுப்பிப்
புயன்முதுகுநெளியாமைகண்டுவில்லாளியுன்போலில்லையின்றுமுதலாய்
பொருகளந்தொறும் வெற்றிபெறுகென்றுகொடியொன்று புனைவித்துவிசய
செயகவித்வசனெனும்பேருங்கொடுத்தவன்சிறுதேருருட்டியருளே [னுக்குச்
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௭)

போராடிலங்கையிற்கடவுள்வாராரனென்றுபொருமுசானகியுயிரையும்
பூவையவள்புக்கவழியெந்தவழியென்றேபுலம்புபெருமானுயிரையும்
பேராதுறக்கமோடுணவுநீக்கியவிளையபெருமாளினுருயிரையும்
பிறிதுகதியிலையென்றுமறுகியவிபீடணப்பெருமாளினுருயிரையும்
பாராளவைத்ததொருபரதனுயிரையுமேழுபத்துவெள்ளத்துயிரையும்
பலபலதொகைப்படுசராசரத்துயிரையும்பாதுகாத்தருளுமெங்கள்
சீராளனேமிக்கதாராளனேயழகுசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௮)

பொறிவழியிலேயுருத்திரமூர்த்திபலகலன்புனைவழியிலாதிமூர்த்தி
புலனுதவுவழியிலம்புயமூர்த்தியோரைம்புலாதிகளடக்கினமையால்
சருவவழியிலுமிக்கமுதலானமூர்த்திநெறிதருமந்த்ரயந்த்ரங்களுட்
டகுமோமீறீமுரும்அரிமர்க்கடாயவரதவமுள்ளமந்த்ரமூர்த்தி
குறிமகாதைரியவலங்காரகம்பீரகோரவுத்தண்டமூர்த்தி
கூறரியதெய்வமனுவாறிரண்டையுமுளங்கொண்டவர்க்கெளியமூர்த்தி
செறிவரியதெய்வங்களுக்கெலாமுதன்மூர்த்திசிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௯)

இழிமாலைமுடைநாறுதலைமாலையுளவிராவணன்வென்றிமாலைவிழுநாள்
இருண்மாலையைத்தள்ளியருண்மாலையைப் பூட்டுமீர்ந்துழாய்மாலையுடையா
கொழுமாலைமேனிவெண்டலைமாலையான்மகிழ்குபேரன்மணிமாலைவாங்கிக் [ன்
குளிர்மாலைமதிநுதலியெனையீன்றசந்த்ரகுலகுணமாலைதன்னைநோக்கிப்
பொழிமாலைவார்குழலியோர்விசயமாலையிதுபுனையெனவளிப்பவாங்கிப்
போதுறைபிராட்டியநுமான்வருகவருகநீபூணெனவழங்குமுத்தின்
செழுமாலைபோலெனதுமொழிமாலைகொண்டுளான்சிறுதேருருட்டியருளே
திக்குளோர்பரவவருமுக்கண்மாருதியமலசிறுதேருருட்டியருளே. (௧௦)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

அநுமார் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---